23rd March 1961]

பெண்களாலேயே தேர்ந்தெடுக்கப்படவேண்டும் என்பது அரசியல் சட்டத் திலேயே விலக்கப்பட்டிருக்கின்றன. கனம் அங்கத்தினர் விரும்பியமாதிரி எலெக்ஷன் கமிஷன் விரும்பிஞலும் செய்ய முடியாது.

*Chairmen of Panchayat Unions (use of Jeeps)*

*1024 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN : கனம் முதல் அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) பஞ்சாயத்து யூனியன்களை அமைப்பதற்கு முன்னுல் உபயோகிக் கப்படுத்தப்பட்டு வந்த ஜீப் கார்களை பஞ்சாயத்து யூனியன் தலைவர்கள் உபயோகப்படுத்தலாமா ?

(இ) எந்த அளவுக்கு யூனியன் தலைவர், யூனியன் கமிஷனர் முதலிய வர்கள் உபயோகப்படுத்த வேண்டுமென்பதைப்பற்றி சர்க்காரால் உத்தரவு அனுப்பப்பட்டுள்ளதா ?

(உ) விவரம் மேஜைமீது வைக்கப்படுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) Yes.

(*b*) Yes.

(*c*) A copy of the order [a] is placed on the table of the House.

SRI V. K. KOTHANDARAMAN : பஞ்சாயத்து யூனியன் தலைவர் பஞ்சாயத்து யூனியன் எரியாவிலே ஒரு கோடியிலே இருந்து கொண்டு மற்றொரு கோடியிலுள்ள ஆபீசுக்குப் போகவேண்டுமென்றால் ஜீப்பை அனுப்பிவைத்து அதன் மூலம் அங்கே போகிறார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : பஞ்சாயத்து யூனியன் பிரிசி டெண்ட் ஒரு கோடியில் இருந்தாலும். ஆபீஸ் மத்தியில்தான் இக்கும். அங்கங்கே இருக்கக்கூடிய பஞ்சாயத்து தலைவர்கள் ஒத்துப்போகக்கூடிய விஷயம் இது. இது சட்டசபை அங்கத்தினரோ அல்லது சர்க்காரோ உத்திரவு போட்டு நடத்தக்கூடிய விஷயம் அல்ல. இதை எல்லாம் நிர் வகிக்கக்கூடிய பஞ்சாயத்து பிரெசிடெண்டைப் பொறுத்து இருக்கிறது.

SRI C. NATARAJAN : தலைவர் அவர்களே, இந்த பஞ்சாயத்து யூனியன் தலைவர் ஜீப் உபயோகப்படுத்துகிற மாதிரி உதவித் தலைவரின் உபயோகத்திற்கும் கொடுக்க முடியுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM: அப்படியென்றால் அங்கத்தினரும் கேட்பார்கள் என்ற நிலைமை ஏற்படும். பஞ்சாயத்து யூனியன் தலைவர் களுக்கு சில அலுவல்கள் பார்ப்பதற்கு வேண்டி ஜீப் கொடுக்கப்படுகிறது. பஞ்சாயத்து யூனியன் தலைவர் இல்லாத காலத்திலே பஞ்சாயத்து யூனியன் அலுவல்களை உபதலைவர் பார்க்கும்போது இந்த ஜீப் அவரால் உப யோகப்படுத்தப்படும்.

SRI S. M. ANNAMALAI : மேஜைமீது வைக்கப்பட்டுள்ள அறிக்கை யிலே 'The Panchayat Union Chairman may use the Block jeep' என்று சொல்லப்பட்டிருக்கிறது. அப்படியிருந்தும்கூட சில சமுதாய நலத் திட்டப் பகுதியிலே ஜீப்பை உபயோகிப்பதில் சேர்மெனுக்கும், பி.டி.ஓ. விற்கும் தக ராறு ஏற்படுகிறது. இம்மாதிரி தகராறு ஏற்படாமல் இருக்க அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுத்துக்கொள்ளுகிறது ? ஜீப் யாருடைய பொறுப் பில் இருக்கிறது ?

THE HON. SRI C. SUBRAMANIAM : எல்லா விஷயங்களுக்கும் பி.டி.ஓ. தான் பொறுப்பு. பஞ்சாயத்து யூனியன் தலைவர் உபயோகிப் பதற்கும் கொடுக்கப்படுகிறது.

---

a Printed as Appendix on page 458 infra.